*முதற் பதிப்பு: செப்டம்பர் 2023*

*தலைப்பு: ஆத்தூர் கோட்டை — அரிய தகவல்கள்*

*உருவாக்கம்:*
*திரு. பொன். வெங்கடேசன், ஆறகளூர்.*
*திரு. டாக்டர். சி. பொன்னம்பலம், வாழப்பாடி.*
*திரு. வை. கலைச்செல்வன், செல்லியம்பாளையம்.*
*திரு. கா. சீனிவாசன், ஓமலூர்.*
*சேலம் வரலாற்று ஆய்வு மையம்.*

*புத்தக அளவு: டெமி 1/8*
*பக்கங்கள்: 22*
*பொருள்: வரலாறு*
*தாள்: கிரீம் ஓவ்*
*படிகள்: 8*

*பதிப்பு வெளியீடு & பதிப்புரிமை:*
*சேலம் வரலாற்று ஆய்வு மையம்*
*செல்லம் மருந்தகம்,*
*கடை வீதி, ஆறகழூர்—636101*
*ஆத்தூர் வட்டம். சேலம் மாவட்டம்.*
*தொலைபேசி: +91 4282 260305*
*கைப்பேசி: +91 7010580752*
*மின்னஞ்சல்: salemhrc@gmail.com*

---



*ஆத்தூர் — ஓர் அறிமுகம்*

- சேலம்-கடலூர் நெடுஞ்சாலையில் சேலத்திலிருந்து 55 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது ஆத்தூர்.

- வசிஷ்டநதி, இவ்வூரை ஆத்தூர், புதுப்பேட்டை என இரண்டாகப் பிரிக்கிறது. நதியின் வடகரையில் கோட்டை அமைந்துள்ளது.

- ஆறு + ஊர் = ஆற்றூர் = ஆத்தூர்

- வசிஷ்ட நதியின் தென் கரையில் அமைந்துள்ளது.

- கி.பி.10ஆம் நூற்றாண்டு முதலாம் பராந்தக சோழன் கல்வெட்டுகளில் ஆற்றூர் கூற்றம் என்று குறிப்பிடப்படுகிறது.

- வாணகோவரையர்களின் ஆட்சியில் மகதை மண்டலத்தில் ஆறகளூர் ஆட்சிப்பகுதியின் ஒரு பகுதியாக ஆற்றூர் கூற்றம் இருந்துள்ளது. மிலாட்டு ஆற்றூர் கூற்றம் அல்லது மகதை மண்டலத்து ஜனநாத வளநாட்டு ஆற்றூர்.

- தாரமங்கலத்து கெட்டி முதலிகள் ஆட்சியில் ஆத்தூர் அவர்களின் கிழக்கு எல்லையாக இருந்துள்ளது.




2016 செப்டம்பர் 9, சேலம் வரலாற்று ஆய்வு மைய ஆத்தூர் கோட்டை மரபு நடையின் போது.

கெட்டி முதலிகள் தலைநகராக அமரகுந்தி கோட்டையும், மேற்கு எல்லையாக காவிரிபுரக் கோட்டையும், கிழக்கு எல்லையாக அனந்தகிரி எனும் ஆத்தூர் கோட்டையும் அமைந்திருந்ததாக கெட்டி முதலிகள் வரலாறு கூறுகிறது.

மதுரை நாயக்கர்களின் பாளையக்காரர்களில் ஒருவரான சேலம் சின்னபூபாலன் என்று அறியப்படும் சின்னம நாயக்கரின் ஆறு மகன்களில் இரண்டாவது மகன் இலட்சுமண நாயக்கர் இப்பகுதியின் சிற்றரசராக இருந்துள்ளார்.

கி.பி. 1689ஆம் ஆண்டு மைசூர் படையெடுப்பின் போது, மைசூர் தளபதி ஹம்பையா, கெட்டி முதலிகளின் சாம்பள்ளி, ஓமலூர், அனந்தகிரி ஆத்தூர் கோட்டைகளை தனது நேரடி ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தார். அது முதல் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலம் இவ்வூர் மைசூர் பகுதியைச் சேர்ந்ததாகவே இருந்தது. மைசூர் மன்னர்கள் ஆட்சியில் கி.பி. 1689 முதல் ஆற்றூர், அனந்தகிரி என அழைக்கப்பட்டு வந்தது.

கி.பி. 1760ல் பாராமஹாலின் 17 பிரிவுகளில் அனந்தகிரியும் ஒன்று. கி.பி.1792ல் பாராமஹால் மற்றும் சேலம் தென் பகுதியின் ஒன்பது பிரிவுகளில் ஒன்றாக இவ்வூர் வந்தது. அதுவரை அனந்தகிரி என்று வழங்கப்பட்டு வந்த இவ்வூர் கி.பி. 1796ல் ஆத்தூர் என்று வழங்கப்படலானது. ஹைதர், திப்பு சுல்தான் மற்றும் ஆங்கிலேயர் ஆட்சியின் போதும் இவ்வூர் கோட்டை ஓர் படை மையமாகவே இருந்தது.

கி.பி. 1768ல் இக்கோட்டை ஆங்கிலேயர் வசம் வந்தது. பின்பு மீண்டும் ஹைதர் அலியின் கட்டுப்பாட்டுக்குள் சென்றது. கி.பி. 1792ல் மூன்றாம் மைசூர் போரின் போது, திப்பு சுல்தான் ஆட்சியில் இக்கோட்டை ஆங்கிலேயர் வசம் வந்தது. தளபதி கேம்பல் என்ற ஆங்கிலேய தளபதியின் படைகள் கி.பி. 1792 முதல் இக்கோட்டையை ஆக்கிரமித்தனர்.

*கி.பி.1799ல் சங்ககிரிக்கோட்டைக்கு ஆங்கிலேயப் படைகள் பெயர்ச்சி அடையவும், இக்கோட்டை தன் முக்கியத்துவம் இழக்கத் துவங்கியது. பின்பு கி.பி. 1824 வரை இக்கோட்டை படைக் கருவிகள் வைக்கும் இடமாகவே பயன்படுத்தப்பட்டு வந்தது.*

### ஆத்தூர் கோட்டை அரண் அமைப்பு

*சங்க இலக்கியங்களில் அக்கால மன்னர்களின் கோட்டைகள் பற்றிய குறிப்புகள் நிறைய காணப்படுகின்றது. அரசன் தங்கியிருக்கும் கோட்டையைச் சுற்றி பல அரண்கள் அமைந்திருக்கும். அவையாவன:*

***1. மதிலரண், 2. நிலவரண், 3. நீரரண், 4. காட்டரண், 5. மலையரண்.***

*மதில்கள் அகழிகளால் சூழப்பட்டிருக்கும். இவ்விடம் "கிடங்கில்" என்று குறிப்பிடப்படும். இரைதேடி உலாவும் வளைந்த கால்களை உடைய முதலைகள் நிரம்பப் பெற்ற அகழிகளை உடைய கிடங்கு என்று மலைப்படுகடாம் நூல் குறிப்பிடுகிறது.*

*கெட்டி முதலிகள் அந்தியூர், ஓமலூர், காவேரிபுரம், சாம்பள்ளி, பவானி கூடுதுறை, மேச்சேரி, அனந்தகிரி (ஆத்தூர்) ஆகிய இடங்களில் கோட்டை அமைத்து காவல் புரிந்ததாக கெட்டி முதலிகள் வரலாறு கூறுகிறது. இவற்றுள் அனந்தகிரி (ஆத்தூர்) கோட்டையே பெரியது.*

*கெட்டி முதலிகளின் மற்ற கோட்டைகள் அனைத்தும் மண்கோட்டைகளாக இருந்தன. ஆனால் அனந்தகிரி (ஆத்தூர்) கோட்டை மட்டும் கற்கோட்டை. வசிஷ்ட நதியில் வடக்கு கரையில் அமைந்துள்ள இக்கோட்டை நீர் அரண் அமைப்புக்கு ஓர் சிறந்த உதாரணம். வசிஷ்ட நதிக்கு நிவா நதி[1] என்றே கல்வெட்டு குறிப்பு உள்ளது.*

### ஆத்தூர் கோட்டை கட்டியது யார்?

*இக்கோட்டை 16ஆம் நூற்றாண்டின் இறுதியில் தாரமங்கலத்து கெட்டி முதலிகள் வம்சத்தினரால் கட்டப்பட்டிருக்கலாம்[2] அல்லது மதுரை நாயக்கர் காலத்தில் பாளையக்காரர்களில் ஒருவரான சேலம் சின்ன பூபாலர் எனும் சின்னம நாயக்கரின் ஆறு மகன்களில் ஒருவரான லட்சுமண நாயக்கரால் கட்டப்பட்டிருக்கலாம்[3] என்றும் இருவேறு கருத்துகள் உள்ளன.*

### லட்சுமண நாயக்கர் — ஓர் அறிமுகம்

*17ஆம் நூற்றாண்டில் மதுரை நாயக்கர்கள் ஆட்சியில், அவர்கள் ஆட்சிக்குட்பட்ட பகுதிகள் பாளையங்களாக பிரிக்கப்பட்ட போது, சேலம் பகுதி பாளையக்காரராக அறியப்படுபவர் சின்னம நாயக்கர் எனும் சேலம் சின்ன பூபாலர் உத்தண்டப்ப நாயக்கர். இவருக்கு 6 மகன்கள்.*

---

[1] *நிவாவாற்று வடகரை — க.ஆ.எ. 403—1913*
[2] *சோம்பள்ளிக் கைப்பீது — 1807 /30.04.1807*
[3] *பேளூர், செக்கடிப்பட்டி கல்வெட்டு*



லட்சுமண நாயக்கர் மற்றும் சின்னப்ப நாயக்கர் | சேலம் அரசு அருங்காட்சியகம்

*1. ராம நாயக்கர்.*
*2. லட்சுமண நாயக்கர்.*
*8. சின்னப்ப நாயக்கர்.*
*4. பெத்த நாயக்கர்.*
*5. திருமலை நாயக்கர்.*
*6. வெங்கடப்ப நாயக்கர்.*

*இவர்களில் ராம நாயக்கர், இலட்சுமண நாயக்கர் இருவரும் இரட்டைப் பிறவிகள். இந்த அறுவரும் ஆத்தூர், பேளூர் போன்ற பகுதிகளில் மதகுகள் அமைத்து நீர்வளம் பெருக்கி உள்ளனர். லட்சுமண, சின்னப்ப, வெங்கடப்ப நாயக்கர்கள் சேலம் மட்டுமின்றி தர்மபுரி, தென்னார்காடு, திருச்சி மாவட்டத்தில் சில பகுதிகள் இவர்களின் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது. இந்த அறுவரின் பெயரில் இன்றும் ஆத்தூர் மற்றும் பேளூர் அருகே ராமநாயக்கன் பாளையம், லட்சுமண சமுத்திரம், சின்னமநாயக்கன் பாளையம், பெத்தநாயக்கன் பாளையம், வெங்கடப்ப சமுத்திரம் எனும் ஊர்கள்*



**செக்கடிப்பட்டி**

*பேளூர் அருகே உள்ள ஊர் செக்கடிப்பட்டியில் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு விஜய நகர / திருமலை நாயக்கர் கால கல்வெட்டு 1985ம் ஆண்டு கண்டறியப்பட்டுள்ளது. மேற்குறிப்பிட்டுள்ள செய்திகள் அக்கல்வெட்டு தரும் செய்திகளே ஆகும். இலட்சுமண நாயக்கர் ஆத்தூர் கோட்டையை முழுவதும் கட்டினாரா அல்லது ஏற்கனவே*

கெட்டி முதலிகள் கட்டிய கோட்டையை விரிவாக்கம் செய்தாரா என்பது ஆய்வுக்குரியது.



**செக்கடிப்பட்டி கல்வட்டு தரும் செய்தி**

சேலம் பாளையக்காரர் சின்னம நாயக்கரின் மக்கள் அறுவரில் லட்சுமண நாயக்கர் என்பவர் பேளூரில் கோட்டை அமைத்து வாழ்ந்ததும், ஆற்றில் பல இடங்களில் அணைகள் கட்டியதையும் குறிப்பிடுகிறது. மதுரை மீனாட்சி சுந்தரேஷ்வரர் திருத்தேருக்கு சங்கிலி செய்வித்தமையும், அச்செயலை செய்து முடித்த கெங்கையாடி திருவனந்தல் பண்டாரம் என்பவனுக்கு லட்சுமண சமுத்திரத்தில் 24 அடி கோலால் 100 கூலி நிலம் கொடையாக அளித்த செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது. லட்சுமண நாயக்கர் தன் தந்தையாகிய சின்னம நாயக்கரின் பெயரில் பேளூர் பெருமாள் கோயில் எதிரில் சின்னம நாயக்கர் மடம் ஒன்றை அமைத்ததையும் குறிப்பிடுகிறது.

**கோட்டை அமைப்பு**

62 ஏக்கர் பரப்பளவும், ஒரு கி.மீ. சுற்றளவும் கொண்ட உயரம் 30 அடி உயரமும் 15 அடி அகலமும் கொண்ட இக்கோட்டை மதிலின் கற்கள் ஆப்பு வடிவத்தில் வெட்டப்பட்டு, மிகுந்த பிடிமானத்துடன் கட்டப்பட்டுள்ளது. உயர்ந்த நெடுமதிலும், பீரங்கி வைப்பதற்கான மதிற்குமிழும், பகைவர் எளிதில் நுழைய முடியாவண்ணம் அமைந்துள்ள குகைவாயிலும் கொண்டுள்ளது.






கோட்டையைச் சுற்றி அகன்ற அகழி உள்ளது. இதில் முதலைகள் விட்டு எதிரிகள் உள்ளே நுழையா வண்ணம் காவல் புரிந்திருக்கலாம். இயற்கையாகவே வசிஷ்ட நதியின் வடகரையில் இக்கோட்டை அமைந்துள்ளதால் இந்த நதியே ஓர் சிறந்த நீர் அரணாக விளங்கியிருக்கும்.

பெரும் கற்களை வளி முகம் வைத்து இடைவெளியில் சல்லிமண் கொண்டு கட்டிய தடிமனான கோட்டைச் சுவர்களை எந்த பீரங்கியும் அழிக்க இயலாது. காலங்கள் கடந்தும் நல்ல நிலையில் உள்ள கோட்டைக்கு இவ்வூர் கோட்டை சிறந்த எடுத்துக்காட்டு. திருமலை நாயக்கர் காலத்தில் இராணுவத்தலமாக மாற்றப்பட்டு பழுது பார்க்கப்பட்டுள்ளது.

இக்கோட்டைக்கான கற்கள் இவ்வூருக்கு அருகில் உள்ள கல்லடித்தான் குன்று எனும் மலையிலிருந்து கொண்டு வரப்படிருக்கலாம்.

கோட்டைக்குள் இரண்டு பெரிய மாளிகைகள், இரண்டு கச்சேரி உல்லாச மாடங்கள், எட்டு நீராழி மண்டபங்கள் தானியங்கள் சேமிக்க நான்கு களஞ்சியக் கொட்டாரங்கள், ஐந்து வெடிமருந்துக் கிடங்குகள் ஆகியனவும் உண்டு.

வசந்த மண்டபம் என்றழைக்கப்படும் இடத்தில் ஆலோசனைக் கூட்டம் நடைபெறும். நல்ல காற்றோட்டமான விசாலமான மண்டபம் அரச குடும்பத்தினர் தங்குவதற்கு பயன்பட்டிருக்கலாம். நீராழி மண்டபத்தில் உள்ள இரண்டு குளங்களுக்கும் வசிஷ்ட நதியிலிருந்து நீர் உள்ளே வருமாறு கால்வாய் அமைப்பு கட்டப்பட்டுள்ளது.

தற்போது மண் மூடி, இரண்டு குளங்களும் வெளியே தெரியவில்லை. கோட்டை மதில்கள் மண்சுவராக இறுக எழுப்பப்பட்டு, பிறகு இம்மண் சுவர் கட்டுமானம், அளவாக வெட்டப்பட்ட கற்களால் இறுகப் பதித்து உறுதியானதாக அமைக்கப்பட்டுள்ளது. கோட்டை மதிலில் பதிக்கப்படும்

ஒவ்வொரு கருங்கல்லும் பழங்கால கிணற்றுச் செங்கல் வடிவில் வெட்டப்பட்டு வைக்கப்படுபவை. ஆனால் கோட்டை அரண் மீது பீரங்கிப்புழைகளையும் துப்பாக்கிக்கான சந்துகளையும் கொண்ட மேல்கட்டுமானம் கிடையாது.

சிறிய தானியக்களஞ்சியத்தை ஒட்டியுள்ள இரு கட்டிடங்களில் கிழக்கிந்தியக் கம்பனி அதிகாரிகள் வசித்து வந்தனர். இவ்வழகிய மாளிகையின் கீழ்ப் பகுதி இந்தியக் கட்டிடக்கலை மரபையும், மேற்குபகுதி ஐரோப்பிய மரபையும் ஒட்டி கட்டப்பட்டுள்ளது. இரண்டில் ஒரு மாளிகை கம்பெனி ராணுவ தளபதியின் குடியிருப்பாக இருந்திருக்கிறது. பெரிய குவிந்த கூரை கொண்ட அறை எப்போதாவது ரோமன் கத்தோலிக்க தேவாலயமாய் உபயோகிக்கப்பட்டதாக அறிய வருகிறோம்.

இந்த அறை கட்டிமுதலியின் அலுவலகக் கச்சேரியாக இருந்து வந்த ஒன்று. இதற்குப் பின்னால் அமைந்துள்ள பெரிய கட்டிடம் இருபகுதியாக கட்டப்பட்டிருக்கிறது. இங்கு கட்டி முதலியின் அந்தப்புரப்பெண்டிர் வசித்ததாகவும், இங்கு ஒவ்வொன்றும் ஒரு மணங்கு எடை கொண்ட பீரங்கிக்கான கல்குண்டுகள் கண்டெடுக்கப்பட்டதாகவும் ஆவணக் குறிப்பு தெரிவிக்கிறது.

கோட்டைப் பாதுகாப்பு அரணின் தென் பகுதியை நோக்கியவாறு அமைந்துள்ள அழகிய மாளிகைதான் கெட்டி முதலிகளின் உல்லாச மாளிகையான வசந்த மாளிகை. இஸ்லாமியக் கட்டிடப் பாணியில் அமைந்த வளைவுகளாலான சுவர் தடுப்புகளும், தூண்களும் நிறைந்த மாளிகை. இதற்கு மிக அருகில் நதிக்கரைக்குப் போய் தண்ணீர் கொண்டு வர வசதியாய் தண்ணீர் வாசல் (Water Gate) ரகசியமாயிருக்கும் வண்ணம் கட்டப்பட்டுள்ளது. இதைச் சுற்றி உறுதிமிக்க பாதுகாப்புச் சுவரும், புற அரணும் அமைக்கப்பட்டுள்ளன. இதுபோன்று இதன் வடக்கில் ஒரு வாசல் வசிஷ்ட நதியை நோக்கிக் கட்டப்பட்டுள்ளது. இந்த வடதிசை வாசல்தான் பேருந்து நிலையத்தையும், ஆத்தூரையும் கோட்டையோடு தற்போது இணைக்கிறது. இரகசியமாய், வசந்தமாளிகைக்கு அருகாக அமைந்துள்ள தண்ணீர் வாசல் வசிஷ்ட நதிக்குப்போகும் வழியைக் கொண்டது.

**கோட்டைக்குள் அமைந்துள்ள ஆலயங்கள்**

1. காய நிர்மலேசுவரர் ஆலயம்.
2. பிரசன்ன வெங்கடேச பெருமாள் ஆலயம்.
3. முனியப்பன் கோயில்.

**1. காய நிர்மலேசுவரர் ஆலயம்**

இக்கோயில் காலத்தால் முற்பட்டது. கி.பி. 10ஆம் நூற்றாண்டில் (கி.பி.907—953) முதலாம் பராந்தக சோழனின் கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. இக்கோயிலின் அமைப்பு முதலாம் ஆதித்த சோழன் கால கட்டிட அமைப்பை சார்ந்தது. (கி.பி. 880—907) கோயில் இரண்டு தளங்களை உடைய விமான நிலைகள் கொண்டது. 2 முதல் 4 வரை விமான தளங்கள் அமைக்கும் முறை முதலாம் ஆதித்தன் காலத்தவையே.











காய நிர்மலேசுவரர் ஆலயம்
படங்கள் நன்றி: திரு.வேலுதரன்













*காய நிர்மலேசுவரர் ஆலயம் படங்கள் நன்றி: திரு.வேலுதரன்*

*கல்வெட்டுகள் இத்திருத்தல இறைவனை* ***“திருமேற்றளி உடைய நாயனார்”*** *என்று குறிப்பிட்டுள்ளன.*

**கல்வெட்டுகள்**

*இக்கோயிலில் மொத்தம் 5 கல்வெட்டுகள் உள்ளன. அவற்றின் விபரம் :*

***கல்வெட்டு 1:***

*அமைவிடம்: கருவறை மேற்குபுறச் சுவர்*
*காலம்: முதலாம் பராந்தகச் சோழன் | கி.பி. 10ஆம் நூற்றாண்டு.*

*செய்தி: ஆற்றூர் கூற்றத்து பிரம்மதேயம் மலையமான் ஆற்றூர் இறைவனுக்கு அரசனுக்கு காரியம் செய்கின்ற மூவர் சேர்ந்து நாள்தோறும் குறுணி நெல்லால் வந்த அரிசியைக் கொண்டு அமுத படைக்க ஆவண செய்யப் பெற்றமை.*

***கல்வெட்டு 2:***

*அமைவிடம்: கருவறையின் மேற்குப்புற அடித்தளம்*
*காலம்: 13ஆம் நூற்றாண்டு கல்வெட்டு.*

*செய்தி: ஆற்றூரில் திருமேற்றளி உடைய நாயனார் கோயிலுக்கு திருவிளக்குக்கு தன் நிலக்கொடை பற்றி வன்நெஞ்சப் பெருமாள் என்ற அதிகாரியின் ஓலை ஆற்றூர் ஊரவருக்கு அனுப்பப்பட்ட தகவல்.*

***கல்வட்டு 3:***

*அமைவிடம்: கருவறை வடக்குபுற அடித்தளம்*
*காலம்: விஜயநகரர் காலம். 16ஆம் நூற்றாண்டு (21.10.1509)*




*செய்தி : துலுக்கண நாயக்கர் ஆற்றூர் நாட்டு பிரிவில் இருந்து நிவாவாற்று வடகரையில் கள்ளி நத்தம் (தற்போதைய கல்லாநத்தம்) என்ற ஊரை மாயித்தால் அகரம் என்று பெயர் மாற்றம் செய்து பற்பநாபட்டர் என்ற அந்தணர்க்கு கொடுத்த செய்தி.*

**கல்வெட்டு *4:***

*அமைவிடம்: கருவறை வடக்குபுற அடித்தளம்*
*காலம்: கிருஷ்ண தேவராயர். 16ஆம் நூற்றாண்டு (8.4.1513)*

*செய்தி: அக்கி திம்ம நாயக்கர் என்பவர் அருணகிரிநாதர் குமாரர் ரங்கராச பட்டர் என்பவர்க்கு கொடையாக நிவா ஆற்றின் (வசிஷ்ட நதி) கரையில் உள்ள வில்லவராய நத்தம் என்னும் ஊரை கொடுத்தது. அவ்வூர் "அக்கி திம்மப்ப நாயக்க சதுர்வேதி மங்கலம்" என்று வழங்கப்பட்டது.*

**கல்வெட்டு *5:***

*அமைவிடம்: கருவறை மேற்குபுற அடித்தளம்.*
*காலம்: கிருஷ்ண தேவராயர். 16 ஆம் நூற்றாண்டு (5.8.1529)*

*செய்தி: நிலதானம் குறித்தது. கல்வெட்டு மிகவும் சிதைவுற்ற நிலையில் உள்ளது.*

*வசிஷ்ட நதியின் கரையில் அமைந்துள்ள பஞ்சபூத தலங்களில் இக்காய நிர்மலேசுவரர் ஆலயம் அக்னி ஸ்தலம் ஆகும்.*

இதர பஞ்சபூதத் தலங்கள்:

நிலம் — பேளூர் தான்தோன்றீஸ்வரர்.
நீர் — ஏத்தாப்பூர் சாம்பமூர்த்தீஸ்வரர்.
காற்று — ஆறகளூர் காமநாதீஸ்வரர்.
ஆகாயம் — கூகையூர் சொர்ணபுரீஸ்வரர்.

### 2. பிரசன்ன வெங்கடேச பெருமாள் கோயில்

இக்கோயில் வணங்காமுடி கட்டி முதலியால் கட்டப்படிருக்க வேண்டும். (கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் இக்கோயிலில் இம்மன்னரின் சிலை உள்ளதாக குறிப்பு உள்ளது. வணங்காமுடியும், அவர் தம்பி கொமாரக் கட்டி இருவரும் திருமலை நாயக்கருக்கு நல்ல படைத்தளபதியாக இருந்தள்ளனர்.3.




பிரசன்ன வெங்கடேச பெருமாள் கோயில் (கோட்டைப் பெருமாள்)
படங்கள் நன்றி: திரு.வேலுதரன்

### கோட்டை முனியப்பன் கோயில்

சென்ற நூற்றாண்டில் கட்டப்பட்ட முனியப்பன் ஆலயம். வழமையான முனீசுவரர், குதிரையுடன் மதுர வீரன், துப்பாக்கி ஏந்திய வெளிநாட்டவர் மற்றும் இரு நடுகல் வீரர்களுடன். எழுத்துக்கள் பொறிக்கப்படாமையால் விபரம் அறியவியலவில்லை.




கோட்டை முனியப்பன் கோயில் | படங்கள் நன்றி: திரு.வேலுதரன்

**கொப்பரைகள் அல்லது தவலைகள்**

*ஒவ்வொரு கொப்பரையும் இரண்டு இரும்புத் தகடுகளால் செய்து ரிவிட்டுகளால் இணைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றும் 38¾ பவுண்ட் எடையும், 5¾ கனஅளவு கொள்ளளவும் கொண்டது. இதை நிரப்ப 17,30,784 நாணயங்கள் தேவைப்படும் என்றும், அதன் மதிப்பு அன்றைய கணக்கெடுப்பின்படி ரூபாய் 50,07,444 என்றும் சென்னை ராஜதானி கெஜட் செய்தி கூறுகிறது.*

*கெட்டி முதலிகள் காவேரிபுரம் பகுதியில் மதுரகிரி எனும் தேன்மலை அடிவாரத்தில் கம்பட்டம் எனும் நாணயம் அச்சடிக்கும் சாலை ஒன்றை ஏற்படுத்தினர் என்று கெட்டி முதலிகள் வரலாறு கூறுகிறது.*

*கெட்டி முதலி அரசர்களில் ஒருவர் ஆத்தூர் பகுதியில் வேட்டையாடியபோது, அந்த கம்பட்டம் நாணய சாலைக்கு பயன்படுத்திய கொப்பரைகளில் 7 கொப்பரைகள் நிறைய தங்க காசுகள் இங்கு புதையலாக கிடைத்தது என்றும், இங்கு கிடைத்த ஏழு கொப்பரை தங்க நாணயங்களைக் கொண்டே இக்கோட்டையை செட்டி முதலிகள் கட்டினர் என்ற கதையும் உலவுகிறது. இக்கொப்பரைகளில் ஒன்று இன்றும் சென்னை அருங்காட்சியத்தில் வைக்கப்பட்டுள்ளது. ஒரு கொப்பரை இக்கோயிலில் இருந்தது என்றும், அதுவும் தற்போது சென்னை அருங்காட்சியகத்திற்கு கொண்டு சென்றுவிட்டனர் என்றும் கூறுகின்றனர்.*

**கல்லறை மற்றும் நினைவுச் சின்னம்**

*கோட்டையின் வட மேற்கே மதில் சுவருக்கு உள்ளே ஒரு கல்லறையும், ஒரு நினைவுச் சின்னமும் உள்ளது.*

**ஜான் முர்ரே கல்லறை**

*கிழக்கிந்தியக் கம்பனி ராணுவத்தில் சேவை புரிந்த சுதேசி குதிரைப் படையின் லெஃப்டினண்ட் கர்னல் ஜான் முர்ரே, கடைசி மைசூர் யுத்தத்தில் கி.பி. 1799 மே 6ம் தேதி மரணமடைந்ததன் நினைவாக, அவரது மனைவி ஆன் முர்ரே அவர்களால் எழுப்பப்பட்ட நினைவுச் சின்னம். ஜான் முர்ரே சுதேசி குதிரைப் படையின் முதல் ரெஜிமெண்ட் தளபதியாக இருந்தவர்.*



*கி.பி. 1799ல் மே 4ல் திப்புசுல்தான் மரணத்தை அடுத்து ஸ்ரீரங்கப்பட்டிணம் வீழ்ச்சி அடைந்து கம்பனி வசமாக, ஜான் முர்ரே அப்பெரிய படையிலிருந்து விடுவிக்கப்பட்டு ஆத்தூரை அடைந்து, மே 6—ல் மரணமடைகிறார். அவரின் நினைவாக அவரது மனைவி எழுப்பிய கல்லறை இது.*

**ஜேன் கோயல் நினைவுச் சின்னம்**



ஜேன் கோயல் நினைவுச்சின்னம்

*கி.பி. 1828 ஆம் ஆண்டு ஜேன் கோயல் என்பவர் சேலம் கலெக்டர் அலுவலகம் முன்பு குதிரையில் சென்றபோது தவறி விழுந்து இறந்துவிட்டார். இவரின் நினைவாக அப்போது ஆத்தூர் கோட்டையில் ஆங்கிலேயத் தளபதி ஹென்றி கோயல் ஓர் நினைவுத்தூண் எழுப்பினார். இந்த சின்னத்தின் மீது பெயர் குறிப்புகளோ, விவரங்களோ காணப்படவில்லை.*

*இப்பகுதி மக்கள் இவ்விரண்டையும் ராஜா, ராணி சமாதி என்றே அழைக்கின்றனர்.*

**இந்தூர் அரவை இயந்திரம்**



*இக்கோட்டையின் தானியக்கிடங்குகள், உல்லாச மண்டபங்கள் ஆகியவற்றின் பழுது நீக்க இயந்திரம் ஒன்று, 80 ஆண்டுகளுக்கு முன்னர் வட இந்தியாவின் இந்தூரிலிருந்து தருவிக்கப்பட்டு, அக்காலமுறையிலேயே கடுக்காய், ஆற்று மணல், முட்டை, சுண்ணாம்பு, பட்டை போன்றவற்றை பயன்படுத்தி இந்த இயந்திரத்தில் அரைத்து கோட்டையைப் பழுது பார்த்துள்ளனர். அந்த இயந்திரம் இப்பொழுதும் தானியக்கிடங்கின் அருகில் காணப்படுகிறது.*

**சுரங்க வழி**

*கோட்டையின் பின்புறம் மேற்குபகுதியில் அகழியை ஒட்டி சுரங்க வழி ஒன்று அமைந்துள்ளது. இதன் வாயில் பகுதியை அடையாளம் காண பூப்போன்ற பொறிப்பு ஒன்று வெட்டப்பட்டுள்ளது. தற்போது வழி முழுதும் மண் சரிந்து மூடியுள்ளது. இதன் மறுமுனை எங்கே முடிகிறது என்று தெரியவில்லை. ஆத்தூர் அருகே உள்ள தலைவாசல் பகுதியில் இதன் மறுமுனை முடிகிறது என்பது செவிவழிச் செய்தி. அவ்வளவு தொலைவு நீளுமா என்பது சந்தேகமே.*

கோட்டை வரலாறு — ஆண்டுகளில்

*1689—* மைசூர் மன்னர் சிக்கப்ப தேவர் ஆத்தூரை கைப்பற்றுதல்.

*1714—* ஏத்தாப்பூர் சாசனப்படி மைசூர் ஆட்சியின் கீஸீருந்த ஆத்தூர் ஹைதர் அலியின் பொறுப்பில் வந்தது.

*1768—* கர்னல் வுட் கிழக்கிந்திய கம்பனி ராணுவ தளபதி வசம் ஆத்தூர் கோட்டை வந்தது.

*1768—* டிசம்பர் ஹைதர் அலி மீண்டும் ஆத்தூர் கோட்டையை கைப்பற்றி மைசூர் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தார்.

*1792—* மங்களூர் போருக்கு பின்பு, கம்பெனிக்கும், திப்பு சுல்தானுக்கும் இடையே சமாதான உடன்படிக்கை. பின் ஆத்தூர் கோட்டை ஆங்கிலேயர் வசம் வந்தது. கேப்டன் கேம்பல் தலைமையில் 23வது படைப்பிரிவைக் கொண்டு இராணுவ முகாமாக மாற்றப்பட்டது.

*1799—* ஸ்ரீரங்கபட்டிணம் வீழ்ச்சியை அடுத்து கிளைவ் பிரபுவின் திட்டப்படி ஆத்தூர் கோட்டை பீரங்கி நிலையமாக மாற்றி அமைக்கப்பட்டது. சங்ககிரியிலிருந்து பிரிந்து வந்த பீரங்கிப்படை ஒன்று ஆத்தூர் பீரங்கி நிலையத்தை பராமரித்து வந்தது. 1799 மே 6—ல் ஜான் முர்ரே மரணம்.

*1524—* ஆத்தூர் கோட்டை ராணுவ நிலையம் எனும் அந்தஸ்தை இழந்தது. பீரங்கி படைநிலையம் கலைக்கப்பட்டது. ஆத்தூர் சிவில் பகுதியாக மாற்றப்பட்டது.

ஆத்தூர் கோட்டைக்கு புகழ்பெற்ற ஐரோப்பிய ஓவியர் டேனியல் உட்பட எந்த ஓவியரும் வருகை புரியவில்லை. அதனால் ஆங்கிலேயர் ஆட்சியின் போது இக்கோட்டை ஓவியமாகப் பதிவாகவில்லை.

**காண வேண்டிய மற்ற இடங்கள்**

- கோட்டையின் நுழைவு வாயில் அருகில் உள்ள தலையாட்டி பிள்ளையார் கோயில்.
- முனியப்பன் கோயில்.
- கோட்டையின் உள்ளே மேற்கு புறம் உள்ள அய்யனார் கோயில்.
- வசிஷ்ட நதியின் தென்கரையில் உள்ள கைலாசநாதர் கோயில்.
- வசிஷ்ட நதியின் வடக்குபுறம் உள்ள காளிகாம்பாள் கோயில்.
- மடங்கள். ஜதி சங்கரர் மடம், வேணுகோபால சுவாமி மடம்
- புருஷாமிருக சிலை.
- கோட்டையின் வெளிப்புறம் அமைந்துள்ள புலிக்குத்தி நடுகல்.

8870284864

ஆத்தூர் கோட்டை மரபு நடை

அக்டோபர் 9, 2016, ஞாயிறு

காலை 9 மணி முதல் மதியம் 1 மணி வரை

அனைவரும் வருக!

விவரங்களுக்கு

திரு.ஆறகழூர் வெங்கடேசன் பொன் 9047514844 திரு.சீனிவாசன் 9578335777 திரு.கலைச்செல்வன் 9600925060

டாக்டர்.திரு.பொன்னம்பலநாதன் 9842973322 திரு.பெரியார் மன்னன் 9600969118 திரு.ஜீவநாராயணன் 7010635435

சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு

ஆத்தூர் கோட்டை மரபு நடை

சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு

9 அக்டோபர் 2016 ஞாயிறு

8870284864

காலை 9 மணி முதல் மதியம் 1 மணி வரை அனைவரும் வருக!

9 OCT SUN DAY

9AM TO 1PM

சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு வழங்கும்

ஆத்தூர் கோட்டை மரபு நடை

வசிஷ்ட நதிக்கரையோரம்

விவரங்களுக்கு

திரு. ஆறகழூர் வெங்கடேசன் பொன் 9047514844 திரு. சீனிவாசன் 9578335777

திரு. கலைச்செல்வன் 9600925060 டாக்டர்.திரு. பொன்னம்பலநாதன் 9842973322

திரு. பெரியார் மன்னன் 9600969118 திரு. ஜீவநாராயணன் 7010635435

அனைவரும் வருக!

ஆத்தூர் கோட்டை மரபு நடை

சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு

அக்டோபர் 9, 2016, ஞாயிறு

8870284864

காலை 9 மணி முதல் மதியம் 1 மணி வரை அனைவரும் வருக!

**சேலம் வரலாற்று ஆய்வு மையம்**
**(Formerly சேலம் வரலாற்றுத் தேடல் குழு)**
**நடத்திய 'ஆத்தூர் கோட்டை மரபு நடை' அழைப்பிதழ்கள்**

ஆத்தூர் கோட்டை
**மரபு நடை**



அக்டோபர் 9
காலை 9 முதல்
மதியம் 1 வரை.

தாரமங்கலம்
கெட்டி முதலி வம்சம்
அமைத்துப் பின்,
கிழக்கிந்திய கம்பனி
படைப்பிரிவு வசம்
வந்த கோட்டை.




சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு

விவரங்களுக்கு திரு. ஆறகழூர் வெங்கடேசன் பொன் 9047514844 திரு. சீனிவாசன் 9578335777 திரு. கலைச்செல்வன் 9600925060 டாக்டர்.திரு. பொன்னம்பலநாதன் 9842973322 திரு. பெரியார் மன்னன் 9600969118 திரு. ஜீவநாராயணன் 7010635435

அக்டோபர் 9
காலை 9 முதல்
மதியம் 1 வரை.

தாரமங்கலம்
கெட்டி முதலி வம்சம்
அமைத்துப் பின்,
கிழக்கிந்திய கம்பனி
படைப்பிரிவு வசம்
வந்த கோட்டை.

ஆத்தூர் கோட்டை
**மரபு நடை**








சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு

விவரங்களுக்கு திரு. ஆறகழூர் வெங்கடேசன் பொன் 9047514844 திரு. சீனிவாசன் 9578335777 திரு. கலைச்செல்வன் 9600925060 டாக்டர்.திரு. பொன்னம்பலநாதன் 9842973322 திரு. பெரியார் மன்னன் 9600969118 திரு. ஜீவநாராயணன் 7010635435

**சேலம் வரலாற்று ஆய்வு மையம்**
**(Formerly சேலம் வரலாற்றுத் தேடல் குழு)**
**நடத்திய 'ஆத்தூர் கோட்டை மரபு நடை' அழைப்பிதழ்கள்**







**ஆத்தூர் கோட்டை மரபு நடை**

அக். 9 – காலை 9 – மதியம் 1 வரை.

01



**கோட்டை கொத்தளங்கள்**

ஆத்தூர் கோட்டை 62 ஏக்கர் பரப்பளவு. கோட்டைச் சுவர்கள் அகலம் 5 அடி உயரம் 30 அடி

02



**சைவ,வைணவ ஆலயங்கள்**

பராந்தக சோழர் கால சிவாலயம் பஞ்ச பூதத் தலம் காயநிர்மலேசுவரர் ஆலயம்

03



**ஆயுதக் கிடங்குகள்**

தாரமங்கலம் கெட்டி முதலி வம்சம் அமைத்துப் பின், கிழக்கிந்திய கம்பனி படைப்பிரிவு வசம்

வாருங்கள்! சற்று சரித்திரம் கொறிப்போம்!

8870284864



ஒரு காலத்தில், உச்ச பட்ச பாதுகாப்பு கொண்ட, கெட்டி முதலி, மைசூர் சிக்க தேவராயன், ஹைதர் அலி, திப்பு சுல்தான், ஆங்கிலேயரென கோலோச்சின கோட்டைக்குள்ளின்று சாமான்யர்களின் இல்லங்கள்!

எங்கோ பிறந்து, இங்கே மரித்த ஆங்கிலேயர்களின் கல்லறைகள்!

நெருப்பைக் கக்கி, பல்லோர் உயிர் குடித்த பீரங்கிகளின் கற் குண்டுகளின்று, சாமான்யர் இல்ல மதிற் சுவர்களில், அழகுப் பொருளாய்!

நான், எனது எனும் நம் சொற்களைக் கண்டு இயற்கை நகைக்கிறது!

#ஆத்தூர்கோட்டை

வாருங்கள்! கோட்டை கட்டி வாழ்ந்த மனிதக் கனவுகளின் மிச்சங்களை அகழ்ந்தெடுப்போம்!




வாழ்ந்தவர் கோடி! மறைந்தவர் கோடி! என்றும் நிலைப்பது நாமாற்றும் அறமும், காட்டும் அன்பும் தான்!




**ஆத்தூர் கோட்டை மரபு நடை**

**சேலம் மாவட்ட வரலாற்றுத் தேடல் குழு**




**சேலம் வரலாற்று ஆய்வு மையம்**
**(Formerly சேலம் வரலாற்றுத் தேடல் குழு)**
**நடத்திய 'ஆத்தூர் கோட்டை மரபு நடை' அழைப்பிதழ்கள்**







சேலம் வரலாற்று ஆய்வு மையம்
(Formerly சேலம் வரலாற்றுத் தேடல் குழு)
நடத்திய ‘ஆத்தூர் கோட்டை மரபு நடை’ அழைப்பிதழ்கள்